# சுவையான தகவல்கள்



(Photo courtesy- Google Images)

## (முகநூல் பதிவுகளின் ஒரு தொகுப்பு-002)

**Published by**

# Gauri Sankar

# முன்னுரை

புத்தகங்கள் மற்றும் பத்திரிகைகள் படிக்கும்போதும், மற்றவர்களிடம் பேசும் போதும், சமூக வலை தளங்களில் வலம் வரும்போதும் வாழ்க்கைக்கு தேவையான பல தகவல்கள் நமக்கு கிடைத்துக் கொண்டே இருக்கின்றன.

அவற்றை படிப்பது மட்டும் அல்லாமல் பிறருக்கு பகிரும்போது, தகவல்கள் பலருக்கு சென்றடைகின்றன.

வேலை பார்க்கும் இடங்களில், வீடுகளில், கடைகளில் மற்றும் இரயில் பயணங்களில் - கிடைக்கும் சில தகவல்களை மற்றவர்களிடம் பகிர்ந்து கொள்ளும்படியான சந்தர்ப்பங்கள் எல்லோருக்கும் வருவது உண்டு. அந்த வகையில் எனக்கு கிடைத்த சில சுவாரஸ்யமான தகவல்களை உங்களிடம் பகிர்ந்து கொள்ளுவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

இந்த இரண்டாம் தொகுப்பில் சில தகவல்களை பகிர்ந்து கொண்டுள்ளேன்.

கண்டிப்பாக உங்களுக்கு பிடித்திருக்கும் என்று நம்புகிறேன். அரை மணி நேரத்தில் நீங்கள் படித்து முடித்து விடலாம்.



# சுவையான தகவல்கள்

## (முகநூல் பதிவுகளின் ஒரு தொகுப்பு-002)

## 01

## லைசென்ஸ்; லைசென்ஸ்; லைசென்ஸ்;

(ஒரு தகவல்)

இன்றைக்கு குறிப்பாக இரு சக்கர வாகனங்கள் ஓட்டிக்கொண்டு செல்பவர்களுக்கு மூன்று சமாச்சாரங்களும் வேண்டும்; ஓட்டுநர் லைசென்ஸ்; வாகனத்திற்கு RC புத்தகம்; இன்சூரன்ஸ் டாக்குமெண்ட்; ஒருவேளை மனைவியின் வாகனத்தை, கணவர் ஓட்டிக்கொண்டு




சென்றால், மனைவியின் லைசென்ஸ் நகலையும் சென்னையில் கேட்க ஆரம்பித்து விட்டார்கள். இது எதற்கு என்று யோசித்தால், தலை சுற்ற ஆரம்பித்துவிடும். இல்லையா - கட்டு அபராதத்தை; இதற்கு சட்டம் என்ன சொல்லுகிறது என்று தெரியவில்லை.

நமக்கு இந்த லைசென்ஸ் சமாச்சாரம் சின்ன வயசுலே இருந்தே ஒரு அலர்ஜி தான்.


(4)

नवीकरण की तारीख Date of Renewal 27/12/74 | सामने दी गई तारीख तक नवीकरण Renewed for the period ending 31-12-1975
शुल्क Fee ₹15 अधिभार Surcharge | डाकपाल Postmaster

नवीकरण की तारीख Date of Renewal 17/2/76 | सामने दी गई तारीख तक नवीकरण Renewed for the period ending 31-12-1976
शुल्क Fee 15/- अधिभार Surcharge 1/- | डाकपाल Postmaster

नवीकरण की तारीख Date of Renewal 29.1.77 | सामने दी गई तारीख तक नवीकरण Renewed for the period ending 31-12-1977
शुल्क Fee 15/- अधिभार Surcharge | डाकपाल Postmaster

(5)

RENEW EARLY & AVOID THE QUEUE

(1965 - 1970) - ஐம்பது ரூபாய் சைக்கிள் கையில் இருக்கும். அதற்கும் லைசென்ஸ் வேண்டும். ஒரு எண் பதித்த பத்து ரூபாய்

நாணயம் அளவிற்கு ஒரு தகரத்தை தந்து விடுவார்கள். அதை முன்சக்கர பிரேக் கம்பியில் பொறுத்தி விடவேண்டும். அப்போது சைக்கிளுக்கு லைசென்ஸ், இரவு நேரம் என்றால் முன் விளக்கு, பின்பக்கம் மக்கார்டில் danger விளக்கு இவையெல்லாம் இருக்க வேண்டும். இந்த மூன்று சமாச்சாரங்களில் எதாவது ஒன்று மிஸ்ஸிங் என்றால் அபராதம் கட்டவேண்டியது வரும். நிறைய சிறுவர்கள் அபராதம் கட்ட துட்டு (இரண்டு பைசா, மூன்று பைசா - இவற்றை துட்டு என்று தான் சொல்லவேண்டும்) இல்லையென்று சர்வர் சுந்தரம் நாகேஷ் மாதிரி கையை விரித்தால், இருக்கவே இருக்கிறது; வால்வு tube; அதை ஒரு

சக்கரத்தில் இருந்து புடுங்கி விட்டு விடுவார்கள். காவல்துறை அதிகாரியிடம் வாக்குவாதம் செய்தால், டபுள் அபராதம்; இரண்டு சக்கரங்களில் இருந்தும் புடுங்கி விடுவார்கள். அப்படியே தள்ளிக்கொண்டே வரவேண்டும். சைக்கிள் கடையில் வால்வு tube விலைக்கு வாங்கி காற்று அடித்துக்கொண்டு செல்லவேண்டும்.

ஒரு சைக்கிளில் இருவர் செல்லக்கூடாது. எம்ஜிஆர் அவர்கள் முதலமைச்சர் ஆக இருக்கும்போது, இந்த நிபந்தனையை நீக்கி விட்டார். சைக்கிள் லைசென்ஸ்- இதுவும் காணாமல் போனது காலவட்டத்தில்.

அப்போது சைக்கிள் வைத்திருப்பவர்களுக்கு இது ஒரு போனஸ்

மாதிரி. ஆனால் விளக்கு இல்லாமல் வண்டி ஓட்டிக்கொண்டு சென்றால், காவல் அதிகாரியிடம் இருந்து கண்டிப்பாக தப்பித்தே ஆகவேண்டும். இந்த கெடுபிடிகள் காரணமாக நூற்றுக்கு நாற்பது நபர்கள் திடீர் திடீர் என்று வண்டியில் இருந்து இறங்கி தள்ளிக்கொண்டே செல்லுவார்கள். தள்ளிக்கொண்டு சென்றால் அபராதம் கிடையாது.

அடுத்ததாக ஒன்று - ரேடியோவுக்கு லைசென்ஸ் வாங்கவேண்டியது இருந்தது. அப்போது டெலிவிஷன் சமாச்சாரம் கிடையாது. 1978 வரை டெலிவிஷன் பற்றி எதுவும் தெரியாது.

ரேடியோ லைசென்ஸ்- தபால் நிலையத்தில் வாங்கவேண்டும். அதுவும் எல்லா நிலையங்களிலும் கிடைக்காது. குறிப்பிட்ட பெரிய நிலையங்களில் மட்டும் தான் வாங்கமுடியும். கெடு தேதி வந்து விட்டால், அதற்கே ஒரு பெரிய வரிசையில் 100க்கும் மேற்பட்டோர் நிற்பதை பார்க்கலாம்.

இந்த வரிசை என்பது நமது எல்லோருக்கும் பழக்கமானது தானே. ஆதார், ரேஷன், தடுப்பூசி, பேருந்து, ரயில் டிக்கெட் இப்படி வரிசைகள் பலவிதம். தற்போது ஆன்லைன் பதிவு வந்தபிறகு ஓரளவு பரவாயில்லை.

எங்கள் வீட்டில் இருந்த ரேடியோவிற்கு கிட்டத்தட்ட ஆறுவருடங்கள் லைசென்ஸ்

வாங்கியதாக நினைவு. பிறகு அதுவும் காணாமல் போனது.

ஒரு வேளை தற்போது லைசென்ஸ் வேண்டும் என்று சொன்னால், ஆண்ட்ராய்டு சொந்தக்காரர்கள் அனைவரும் வாங்கித்தான் ஆகவேண்டும். அரசுக்கும் நல்ல வரும்படி கிடைக்கும்.

(மாப்பு - வச்சிட்டியேடா ஆப்பு)

---::: :::---

# 02

# வேஷ்ட்டியை மடிச்சிக்கட்டு

(ஒரு தகவல்)

“வேஷ்ட்டியை மடிச்சிக்கட்டு” - எடுத்தவுடனே ஒரு copyright issue; நம்ம பாக்யராஜ் சார் ரொம்ப நாளைக்கு முன்னால் ஒரு படம் எடுத்து அதற்கு இந்த தலைப்பை வைத்தார். இது சும்மா ஒரு பதிவு தான். இருந்தாலும் அவர் பார்வைக்கு வந்தால் - அவர் பெர்மிஷன் கொடுத்த மாதிரி இருக்கட்டும்.

நம்ம சுஜாதா சார் வேஷ்ட்டி புராணம் பற்றி அழகாக எழுதி இருந்தார். அவரை மாதிரி

ஒரு மனுசனை பார்க்கிறது ரொம்ப கஷ்டம். 360 degreele கதை எழுதக்கூடியவர் அவர். வித்தியாசமா எழுதணும்னா அவர் எனக்கு ஒரு inspiration. எனக்கு சில சமயம் தோணும் - இந்த மனுஷன் இம்புட்டு விசையன்களை என்க ஒளிச்சி வைச்சிருந்தார்ன்னு?



(Photo courtesy – Google Images)

சரி நம்ம இப்ப வேஷ்டிக்கு ஒரு சின்ன visit பண்ணிட்டு வருவோம்.

நான் பள்ளிக்கூடம் வரை அரை ட்ரையர் தான். கல்லூரியில் நுழைந்தவுடன் தான் வேஷ்டி கட்ட ஆரம்பித்தேன். (பெரிய மனுஷன் ஆயிட்டோம்ல). ஒரு trial shot மாதிரி கொஞ்ச நாளைக்கு நாலு முழ வேஷ்டி கட்ட ஆரம்பிச்சேன். வேஷ்டி கட்டுறது அப்படி ஒன்னும் சாதாரணமான விஷயம் இல்லை. அதுவரைக்கும் டிராயர் போட்டுக்கிட்டே இங்கிட்டும் அங்கிட்டும் போயிட்டு வந்து கிட்டு, வேஷ்டி கட்ட ஆரம்பிச்ச உடனே, சில நேரங்களில் வேஷ்டி விஷயம் மறந்து விடும். நம்ம பசங்க _"டேய், அவுந்துருச்சிடா;"ன்னு பத்து தெருவுக்கு கேட்கிறமாதிரி சத்தம்

போடுவான். "மானம் காப்பான் நண்பன்". உடனே நடக்கிற வேலை; ஓடுற வேலை; உக்காந்து இருக்கிற வேலை - எல்லாத்தையும் அப்படியே ஒரு ஓரமாக கடாசிட்டு, பசக்ன்னு அந்த முனையை தேடி பிடிச்சி கட்டுவோம். நம்ம மனசு அந்த முனைக்கு தெரியாது. அப்ப தான் எங்கிட்டாவது ஒளிஞ்சி கிடக்கும். தேடிப்பிடிச்சு முனையை கண்டுபிடிச்சு, இடுப்பிலே உக்காரவைச்ச பிறகு தான், மூச்சு வரும். சில நேரம் கடுப்பா இருக்கும். "யாருடா இந்த வேஷ்டியை கண்டுபிடிச்சதுன்னு". இருந்தாலும் இடுப்பிலே இருந்து எந்த நேரம் அவிழ்ந்துவிடுமோன்னு ஒரு பயம் மனசை கவ்விக்கொண்டு இருக்கும். இப்பவும் தான்.

அதன் இடது முனை அல்லது வடது முனையை விசிறி மாதிரி மடிச்சு அப்படியே இடுப்பிலே ஒரு சொருவு சொருவனும்; வேஷ்டி சாஸ்திரம் படி இடப்புறமாத்தான் கட்டணும்னு சொன்னாங்க. அதாவது இந்தியாவில் உள்ள சாலை விதிகளுக்கு கட்டுப்படுற மாதிரி; நான் எப்படியோ வலப்புறமாக கட்டி பழகிட்டேன். அமெரிக்க டிராபிக் ரூல்ஸ் மாதிரி.(Keep Right) அந்த சொருவலுக்கும் நம்ம தமிழ் அகராதி படி ஒரு வார்த்தை இருக்குங்க. அது தான் - "கொசவம்".

இந்த விஷயத்தில் சேலை கட்ட தெரிஞ்ச பெண்கள் super. ஒரு நிமிசத்தில் எவ்வளவு நீளமான சேலையையும் கட்டி முடிச்சுடுவாங்க. அதுவும், அப்படியே

ஊட்டுக்காரர், பசங்க - இவுங்களை ஒரு வாரு வாரிகிட்டே, கொசுவம் காரியத்தையும் முடிச்சிடுவாங்க. பச்சக் பச்சக்ன்னு விசிறி மாதிரி செஞ்சு செஞ்சு ஒரு கொசுவம் தயார் பண்ணி (தீபாவளி மைசூர் பாக் மாதிரி) சொருவிடுவாங்க. எங்கேயெல்லாமோ போவாங்க. வருவாங்க. அப்படியே வீட்டுக்கு வர்றது வரைக்கும் "நச்"னு இடுப்பில் குந்திக்கும். அவுக சொன்னா தான் கொசுவம் நழுவும். அவ்வளவு obedient.

முதன் முதலா நாலு முழ வேஷ்டியை கட்டிட்டு சைக்கிள் ஓட்டிட்டு போகும்போது கவனம் சிதறக்கூடாது. முன்னால் வர வண்டியை பார்த்து ஓட்டுறது ஒரு பக்கம் - இன்னொரு பக்கம் வேஷ்டி விலகி

அப்படியே "மர்லின் மன்றோ" rangeக்கு போயிட்டுதுன்னா சொல்லி முடியாது. நம்ம வயசு பசங்க அதை நாலு வருசத்துக்கு சொல்லி காட்டுவாங்க. நாலு வருசத்துக்கு என்ன - retirement ஆன பிறகு நம்மாளு ஒருத்தன் எங்கேயோ சொல்லிகிட்டே இருப்பான். "அந்த வேஷ்ட்டி விலகல்" ஒரு ஜென்ம சாபம் மாதிரி மாறிடும்.

இடது கை ஸ்டேரிங்; வலது கை வேஷ்டி மேலே ஒரு grip. நூத்துக்கு நூறு பேருக்கு இந்த லாவண்யம் அத்துப்படி.

நாம வேஷ்டியை கட்டி பழகும்போது, வீட்டு பெண்கள் சின்னதாக யாருக்கும் தெரியாமல் ஒரு "சினேகா" புன்னகை release பண்ணுவாங்க. அந்த புன்னகை அப்படியே

அவுக left side கம்மலை ஒரு செகண்ட் touch பண்ணிட்டு வந்திரும்.

இப்ப நம்ம அரசியல்வாதிகள் ஜோரா வேஷ்டியை கட்டிட்டு வர்றதை பார்க்கும் போது ஒரு சிலிர்ப்பாக இருக்குது. உண்மையிலே இந்த விஷயத்தில் அவங்களை பாராட்டிதான் ஆகணும்.

இந்த வேஷ்டி சாஸ்திரத்தில் "பஞ்சகச்சம்"ன்னு ஒரு diploma course இருக்குது. அதுலே வீட்டு பெண்களுக்கு சமமா அப்படியே விசிறி விசிறியாக size மாறாமல் மடிச்சு பின்பக்கமா சொருவனும். இது கொஞ்சம் safety. ஆனால், கீழே விழாமல் நடந்து போறதுக்கு training எடுத்தா தான் முடியும். படியில் ஏறி

போறது; அப்படியே ரோட்டிலே மழைத்தண்ணீரை தாண்டி போறது - ஒரு military activityக்கு சமம்னு சொன்னால் தப்பு ஒன்னும் இல்லிங்க. இதுவும் ஒருமாதிரியான life risk தாங்க. அதனாலே தான் பஞ்சகச்சம் கட்டியவுடன், கால் செருப்புகளை தூர வைச்சிடுவாங்க. அவுக தான் எமனா மாறி நம்ம முன்னாலே வந்து நிக்கும்.

இப்ப, நம்ம வேஷ்டி தயாரிப்பாளர்கள், "ஒட்டிக்கொ - கட்டிக்கோ" அப்படின்னு புது model கொண்டு வந்திருக்காங்க. இது ஒன்னும் ஒரு வித்தியாசமான Apps இல்லேங்க. அப்படியே பசை மாதிரி ஒட்டிக்கணும். நம்ம பசங்களை எந்த riskம் எடுக்க விடாமல் இப்படி செல்லம்

கொடுத்து வளக்கிறதுக்கு இது ஒரு idea அப்படின்னு நான் நினைக்கிறேன். “எனக்கு risk எடுக்கிறது rusk சாப்பிடறது மாதிரின்னு” normal வேஷ்டி கட்ட முன்வரணும் - இந்த காலத்து பசங்க.

சரி இப்ப எதுக்கு இந்த வேஷ்டி புராணம்?

விஷயம் இருக்குது.

வேஷ்டி - அப்படின்னாலே முதல் கலவரம் - யாருக்குன்னா? நம்ம புது மாப்பிள்ளைங்களுக்கு தான். "கண்டிப்பா நான் வேஷ்டி கட்டித்தான் ஆகணுமா? காலம் எவ்வளவோ மாறிடுச்சு" அப்படினு உதடு வரைக்கு வந்துட்டு, வார்த்தைகள் தொண்டைக்குளேயே போய் சொருகிகிடும். அதனால் தான் அவங்க reception ரொம்ப

லைக் பண்ணுவாங்க. கல்யாண தினத்தன்று இவங்களுக்கு தான் எத்தனை எத்தனை risk? வேஷ்டி இடுப்பிலே உட்காரனும்; உருவிறக்கூடாது. முப்பது நாப்பது தடவை உட்காரனும்; எழுந்து நிக்கணும். கண்ணு முன்னாலே வந்து கொண்டிருக்கிற புகையை சமாளிக்கணும். இப்படியும் அப்படியும் மணப்பெண்ணோடே நண்பிகள் இடிச்சிட்டு போறதை tolerate பண்ணனும். இன்னும் நிறைய நிறைய; எல்லாத்துக்கும் மேல மணப்பெண்ணோடே goodwill சம்பாதிக்கணும்; - "கண்டிப்பா வாழ்க்கையில் ஒரு கஷ்டம் வந்தா அதுக்கு பின்னால் ஒரு லாபம் இருக்கத்தான் செய்யும்". இதை படிக்கின்ற, தற்போதைய மாப்பிள்ளைகள்; முற்காலத்து

மாப்பிள்ளைகள் - நாங்க ஒன்னும் அப்படி இல்லேன்னு சொல்லுவாங்களான்னு பாப்போம்.

கல்யாணம் முடிஞ்சபிறகும், முதல் தீபாவளிக்கு வருகின்ற புது மாப்பிளைகளுக்கு அப்படியே வயிற்றை கலக்கும். வேஷ்டியை கட்டணும்; அப்படியே "அவுகளை" அணைச்சிகிட்டு வெடி வெடிக்கணும். ( மாப்பிளைக mindலே 40 பெர்ஸன்ட் வேஷ்டி சம்பந்தமாகவே நினைப்பு இருக்கும்).

இருந்தாலும் அது ஒரு சுகம் தான்.

இதை படித்துக்கொண்டிருக்கிற -

- பழைய பழைய பழைய மாப்பிளைகளுக்கு - (Grand Grand Fathers)

- பழைய பழைய மாப்பிளைகளுக்கு - (Grand Fathers)

- பழைய மாப்பிளைகளுக்கு - Fathers

- Recent மாப்பிளைகளுக்கு - Married

- புது மாப்பிளைகளுக்கு - Just married

- இனி வரபோற மாப்பிள்ளைகளுக்கு

வேஷ்டியை கட்டுங்க - அப்படியே தீபாவளியை நன்றாக கொண்டாடுங்க (நம்பி வாங்க - அப்படியே சந்தோசமா போங்க மாதிரி)

"அனைவருக்கும் தீபாவளி வாழ்த்துக்கள்"

---::: :::---

# 03

# காலங்காத்தால ஒரு கம்யூட்டர் கொள்ளை

அன்று திங்கள் கிழமை விடிகாலை- மூன்று மணி - கணவன், மனைவி மற்றும் நான்கு குழந்தைகள் முந்தின தினம் இரவு “பிக் பாஸ்” பார்த்துவிட்டு தாமதித்து படுக்கச்சென்றதால், ஆழ்ந்த தூக்கத்தில் இருந்தனர்.

"டொக் டொக்" - என்ற சத்தம்; கதவு தட்டப்பட்டது; மீண்டும் மீண்டும் தட்டப்பட்டது. எழுந்திருந்த மனைவி

கதவை திறக்கவும், முகமூடி அணிந்த மூன்று திருடர்கள் உள்ளே நுழைந்து மனைவியின் கழுத்தில் கத்திகளை வைக்க, நான்காவது திருடன் கதவை “படீர்” என்று மூட, விறுவிறுவென்று காரியங்கள் நடந்தன. கணவனும், நான்கு குழந்தைகளும், கயிறுகளால் கட்டப்பட்டு, வாய்களை திறக்கவிடாமல் துணிப்பந்துகள் நுழைக்கப்பட்டு, ஒரு அறையில் அடைக்கப்பட்டனர்.

வீட்டின் அணைத்து அறைகளையும் துளாவிய திருடர்கள், கிடைத்த நகைகளையும், ரூபாய் இரண்டு லட்சம் பணத்தையும் ஒரு மேசை மேல் வைத்து விட்டு அவளிடம் கேட்டனர்.



(Photo courtesy –Google Images)

01. நான்கு தினங்களுக்கு முன்பாக உனது கணவருக்கு கூரியரில் வந்து சேர்ந்த ரூபாய் ஒரு லட்சம் மதிப்புள்ள Oneplus மொபைல் போன் எங்கே?

02. உங்களுடைய 25வது வருட திருமண நாளன்று உங்கள் பெற்றோர் தந்த அந்த மூன்று பவுன் செயின் எங்கே?

03. உன்னுடைய சகோதரன் உன்னுடைய கணவருக்கு தந்த அந்த இரண்டு பவுன் மைனர் செய்யின் எங்கே?

இன்னும் இரண்டு நிமிடங்களில் தரவில்லையென்றால், உன் உயிர் உன்னிடம் இருக்காது, என்று ஒருவன் மிரட்ட, அடுத்த இரண்டு நிமிடங்களில் மூன்று ஐட்டம்களும் வந்து சேர்ந்தன.

அனைத்தையும், ஒரு துணிமூட்டையில் அடுக்கிவிட்டு வாசல் கதவை நோக்கி அவர்கள் நகர, மனைவி ஒருவனிடம் கேட்டாள்.

"தம்பி, நான் தெரியாமதத்தான் கேட்கிறேன். அந்த மூணு ஐட்டம்கள் பற்றி உங்களுக்கு எப்படி தெரிந்தது?"

அவன் கூலாக பதில் சொன்னான்; "நாங்கள் உன்னுடைய முகநூல் நண்பர்கள்; கடந்த மூன்று மாதங்களாக உன்னுடைய பதிவுகள் ஒன்று விடாமல் படித்து வருகிறோம்." சொல்லிவிட்டு அடுத்த ஒரு நிமிடத்தில் அனைவரும் தலைமறைவாயினர்.

போகும்போது அவர்களில் ஒருவன், அழகாக அச்சடிக்கப்பட்ட ஒரு காகிதத்தை அவள் முகத்தில் “படக்” என்று விட்டெறிய, “சரக்” என்று அதை எடுத்து அவள் வாசிக்க ஆரம்பித்தாள்.

*“Mutual “friends” are subject to market risk. Verify the IDs carefully before accepting anyone as your friends”.*

---::: :::---

## 04

# முகநூல் - மெட்டா

முகநூல் - தனது பெயரை மெட்டா என்று மாற்றிக்கொள்ளுகிறார்.

இந்த தளத்தின் பெயர் மாற்றப்படுகிறது. இனி ஒரு சில நாட்களில் முகநூல் பெயர் மாற்றப்பட்டு "மெட்டா" என்று அழைக்கப்படுகிறது.

அதாவது numerology படி சிலர் அடிக்கடி பெயர் மாற்றுவார்கள். உதாரணமாக "Rajasankar என்ற பெயரை அப்படியே Rajaasankar என்று மாற்றிக்கொள்ளுவார்கள்.

அதாவது பத்து எனக்கு மிகவும் ராசியானது என்ற அடிப்படையில்.




(Photo courtesy – Google Images)

சரி இப்ப விசயத்திற்கு வரலாம்.

முகநூல் என்ற பெயர் நன்றாக இல்லையா என்ற கேள்வி இந்த தளத்தை பயன்படுத்தும் அனைவரின் மனங்களிலும் கேட்கப்பட்டுக்கொண்டு இருக்கிறது.

முகநூல் என்பது ஒரு வணிக தளம் தான். இதை பயன்படுத்துபவர்களுக்கு ஒரு பூங்காவிற்கு செல்வது போல சில நிமிடங்கள் அல்லது சில மணி நேரங்கள் கழிகின்றன. அதாவது நமக்கு ஒரு பொழுதுபோக்கு; அவர்களுக்கு வியாபாரம். நம்முடைய முகநூல் பக்கங்களில் விளம்பரங்கள் மட்டும் அல்லாமல், ஒரு பதிவு மாதிரி சில தகவல்கள் வருவதை பார்க்கலாம். அவைகளும் விளம்பரங்கள் தான். கோடிக்கணக்கான விளம்பரங்கள் மூலம் முகநூல் சொந்தக்காரருக்கு வருமானம் வருகிறது.

2021 அக்டொபர் 4ந்தேதி சில காரணங்களால், கிட்டத்தட்ட ஏழுமணி

நேரம் இந்த தளம் ஸ்தம்பித்து போனதால் அவர்களுக்கு நஷடம் 50000 ஆயிரம் கோடிகளுக்கு மேல்.

இங்கு பண நஷ்டம் என்பது முக்கியமல்ல; முகநூலின் நம்பகத்தன்மை - அதாவது credibility – கலைக்கப்பட்டு விட்டது. எனவே, இதை மீட்டுக்கொண்டு வருவதற்கு செய்த முயற்சியில் பிறந்தது தான் மெட்டா.

மெட்டா என்பது "மெட்டாவேர்ஸ் என்பதன் சுருக்கம். இதன் அர்த்தம் – "மெய்நிகர் உலகம்". அதாவது கண்ணுக்குத்தெரியாத உலகிற்கு கொண்டு செல்வது. தற்போது நாம் பயன்படுத்தும் புகைப்படங்கள், காணொளிகள் போன்றவை அனைத்தும்,

நாம் வாழும் இடங்களையே சார்ந்ததாக இருக்கிறது; அதாவது மனிதர்கள், தாவரங்கள், மலைகள், மிருகங்கள் இப்படியாக.

இனிமேல் நாம் இதற்கு அடுத்த கட்டத்தில் கற்பனை நபர்களோடு உலாவரமுடியும். மெட்டா யூனிவெர்ஸ் என்கிற வார்த்தைகளை மெட்டாவேர்ஸ் என்று சொல்லுகிறார்கள்.

அதாவது நாம் வாழ்ந்து கொண்டு இருக்கும் சூழலை கற்பனை சூழலாக மாற்றும் ஆக்மென்ட் ரியாலிட்டி; நம்பமுடியாத கற்பனை சூழலில் நாம் இருப்பதாக உணரச்செயும் விர்ச்சுவல் ரியாலிட்டி.

தற்போது நாம் பயன்படுத்தும் சில காணொளி விளையாட்டுகள் இந்த அடிப்படையில் உள்ளவை தான். இனிமேல் இந்த gamers உதவியில்லாமல், நாமாகவே செய்துகொள்ளமுடியும்.

தற்போது மெய்நிகர் பணம் என்று வந்து விட்டது. கண்ணுக்கு தெரியாத பணத்தை பரிமாறிக்கொள்ளும் ஒரு வசதி. நமது நாட்டில் மத்திய வங்கி இந்த மெய்நிகர் பணத்தை அங்கீகரித்து பரிமாற்றத்திற்கு வழிவகை செய்யப்போவதாக செய்திகள் வந்து கொண்டிருக்கின்றன. மெய்நிகர் பணம் மாதிரி மெய்நிகர் நிலங்கள் வாங்கி வைத்து விலை கூடும்போது விற்றுக்கொள்ளலாம்.

அதாவது நாம் குடியிருக்கும் வீட்டிற்கு மேல் வான்வெளியில் ஒரு கிலோமீட்டர் தூரத்திற்கு விலைபேசி வாங்கி கொள்ளலாம் மற்றும் விற்றுக்கொள்ளலாம் என்று நினைக்கிறன்.

இந்த மெய்நிகர் உலகத்தின் செயல்பாடுகளை ஒருங்கிணைப்பது தான் மார்க்கின் திட்டம். முகநூல் குடும்பத்தில் உள்ள முகநூல், வாட்ஸாப்ப் மற்றும் இன்ஸ்டாகிராம் மற்றும் இவர்களுக்கு சொந்தமான விர்ச்சுவல் விளையாட்டுத்தனமான ஆக்குலஸ் ஆகியவற்றை மெட்டாவேர்ஸ் மூலம் ஒருங்கிணைத்து புதிய தாய் நிறுவனமான

மெட்டாவின் கீழ் கொண்டு வருவது தான் திட்டம்.

இதன் மூலம் பயனாளிகளின் பார்வை மாறுகிறது. எதிர்பார்ப்பு கூடுகிறது. ஒரு வியாபாரத்தின் முக்கிய விதையே பயனாளிகளின் எதிர்பார்ப்புகள் தான். இதை தான் மூலதனமாக எடுத்துக்கொள்ளப்போகிறார் மார்க் அவர்கள்.

இனி கொஞ்சம் அதிகமாகவே கணினி பயன்பாட்டை தெரிந்து கொள்ளவேண்டியதை தவிர நமக்கு வேறு வேலை இல்லை.

---::: :::---

# 05

# உடல்- பொருள் - ஆவி

நான் சின்ன வயசா இருக்கும்போது குமுதம் இதழில் தொடர்கதையா வந்தது - "உடல்- பொருள் - ஆனந்தி"; ஜாவர் சீதாராமன் எழுதிய கதை. வீட்டிலே சொல்லுவாங்க- "டேய், இந்த கதையெல்லாம் படிக்காதே; nightல் கெட்ட கெட்ட கனவா வரும்"ன்னு;

இப்ப வர்ற சினிமா படங்களில் 40 பெர்ஸன்ட் படங்கள் ஆவி சம்பந்தமாதான் இருக்குது. “ஆவி” - அப்பிடிங்க றதுன்னாலே நாமlogic பார்க்கவே முடியாது. ஏன்னா - அது ஆவி சம்பந்தப்பட்ட படம்.

இப்படித்தான்- மாறுதலுக்காக சின்னதா ஒரு visit போகணும்னே நினைச்சிக்கிட்டிருந்தப்போ, ஒரு நண்பர் சொன்னார் - ஊட்டிக்கு போயிட்டுவாங்கன்னு; ஊட்டி ஒன்னும் புது ஊரு இல்லை. பல தடவை போய்ட்டு வந்த இடம் தான். ஆனால் அவரு கொஞ்சம் "பொடி" வைச்சு பேசினார். குறிப்பா ஒரு லாட்ஜ் பேரை சொல்லி அங்கெ அந்த 13ம் நம்பர் அறையில் போய் தங்குங்கன்னு.

"அப்படி என்னங்க அந்த அறையிலே விசேஷம்?"

"அப்படி ஒன்னும் இல்லேங்க; நீங்க தங்கிவிட்டு வந்த பின், வேறு ஒருத்தரை அறிமுகம் செய்தீங்கன்னா, உங்களுக்கு 50

பெர்ஸன்ட் டிஸ்கோவுண்ட் கொடுப்பாங்க. அதாவது நீங்க கொடுத்த பணத்துல பாதியை உங்க வங்கி அக்கௌண்டுக்கு அனுப்பி வைச்சிடுவாங்க.."

மனுஷனை பாடா படுத்துறதே இந்த ஆசை தானே; புத்தர் "ஆசையை ஒழின்னு" சொன்னாரு சொன்னாருன்னு வர்றவன் போறவன் கிட்டே நாம சொன்னாலும், நமக்கு ஆசைன்னு வரும்போது புத்தர் நம்ம கிட்டேயிருந்து காணாம போயிடுவாரு .

வண்டி கிளம்பியது - ஊட்டி வந்தது - அறையும் கிடைத்தது.

பகலில்லே ஒரு tourist வண்டியை எடுத்திக்கிட்டு, கொஞ்ச இடங்களை பார்த்து விட்டு இரவு தங்கவேண்டிய சமயம்.

இரவு மணி பத்து- தூங்குவதற்கு bed தயார் பண்ணி முடிச்சு, ஒரு புத்தகம் நூறு பக்கம் படிச்ச பிறகு; கண் சொருவ ஆரம்பிக்க; தூக்கம் வர ஆரம்பிக்க; பாத் ரூம் போகலாம்னு நினைச்சுகிட்டு இருக்கும்போது -

"டமார்"ன்னு ஒரு சத்தம் – "என்னவாயிருக்கும்?" அப்படின்னு மெதுவாக எந்திரிச்சு பாத் ரூம் போய் பார்த்தோம்னா geyser விழுந்து கிடந்தது.

"என்னய்யா லாட்ஜ்; geyser கூட சரியா fit பண்ண தெரியாம?".



(Photo courtesy - Google Images)

அப்படியே முனங்கிகிட்டே, பாத் ரூம் வேலைய முடிச்சிட்டு, திரும்பி வரும்போது ஒரு லுக் விடும்போது தான் தெரிந்தது. "விழுந்த கிடந்த geyser ஒரு மண்டையோடு மாதிரி சப்பிப்போய் கிடந்தது - சுடுகாட்டுக்குள்ள நடந்து போகும்போது திடீர்னு கால் தட்டி எந்திரிச்சு நிக்குமே அது மாதிரி".

உடம்பை ஒரு உலுக்கு உலுக்கின மாதிரி இருந்தது. அப்படியே அந்த நினைப்பை தூர கிடாசி விட்டு, திரும்பி பெட்டுக்கு வந்து சேர்ந்தேன்.

இப்ப போர்வையை எடுத்து உடம்பு மேல போடும்போது, "சரக்"னு ஒரு சத்தம்; என்னன்னு பார்த்தால், போர்வை நுனி கட்டிலில் உள்ள ஒரு சின்ன ஆணியில் மாட்டி கிழிய ஆரம்பிச்சிருக்கு;

அந்த கிழிஞ்சு போன துணியில் உள்ள ஓட்டை என்னை பார்த்து சிரிச்ச மாதிரி இருந்தது.

சரி; வேற போர்வையை எடுப்போம்னு - துணி அலமாரியை திறக்கப்போனா- "படக்"ன்னு ஒரு சத்தம். அலங்கார மேஜையில் வைச்சிருந்த scent bottle கீழெ விழுந்து ஒழுக ஆரம்பிச்சுது;

திரும்பும் போது தான் தெரிந்தது. கசாப்பு கடையிலே ஆடு வெட்டி முடிஞ்ச பிறகு, அப்படியே ரத்தம் தரையிலே அப்படியே சின்னதா ஓடிக்கிட்டு இருக்குமே - அதே மாதிரி.

எனக்கு அந்த குளிரிலும் மெதுவா வியர்க்க ஆரம்பிச்சுது.

பேனை போடலாம்ன்னு அப்படியே switchஐ தொட்டதும் தான் தாமதம், பேன் "கர கரன்னு" ஓட ஆரம்பிச்சுது.

அது இப்படியும் அப்படியும் டான்ஸ் ஆடுன மாதிரி இருந்தது.

"சரி, இது ஆவியுட வேலை தான்."

பழைய ஜாவர் சீதாராமன் கதையை சின்னதா think பண்ணி பார்த்து எதாவது clue கிடைக்குமான்னு பார்த்தேன். ஒன்னும் நினைவுக்கு வரலே.

கொஞ்சம் தைரியத்தை வரவழைச்சு, பேச ஆரம்பிச்சேன்: "யார் நீ?". ஒன்னும் பதில் இல்லே.

திருப்பி second time கேட்டேன் - யார் நீ?

மெதுவா ஒரு சத்தம் வர ஆரம்பிச்சுது. நம்ம சினிமாவிலே பார்க்கிற மாதிரி "புகை" எதுவும் வரலே.

ஜஸ்ட் ஒரு சவுண்ட் வந்தது.

"நான் தான் கனகம்."

"கனகம்ன்னா யாரு? உனக்கு என்ன வேணும்?"

"நான் பக்கத்து வீட்டு பரமசிவத்தை காதலிச்சதாலே, என் முறை மாமன் என்னை murder பண்ணிட்டாரு."

"சரி, இப்ப நான் உனக்கு என்ன செய்யணும்?"

"நீங்க ஒன்னும் செய்ய வேண்டாம். நான் ஒரு மணி நேரம் சொல்லப்போற என் சோகக்கதையை நீங்க கேட்டால் போதும்."

"சரி சொல்லு."

கதையை நான் கேட்க ஆரம்பித்தேன். (இது ஒரு முகநூல் பதிவு என்பதால், காலத்தின் தன்மை கருதி அந்த கதையை நான் blockout செய்து விடுகிறேன்.)

எங்கே நான் தூங்கி விடுவேனோ என்று பயமா இருந்தது. இது நல்ல ஆவியா அல்லது கெட்ட ஆவியா என்பது தெரியவில்லை. அதனுடைய motive தான் என்ன வென்றும் புரியவில்லை.

"எம்மா கனகா ஆவி; உன் time ஓவர்; இப்ப ஆளை விடு."

"பிரச்சினை என்னனா; என் முறை மாமனை ஒரு வருஷம் கழிச்சு murder பண்ணிட்டாங்க; இப்ப அவரும் ஆவியா மாறி என்னை சுத்தி சுத்தி வந்துகிட்டு இருக்கிறாரு."

(சே- ஆவியானாலும், இந்த காதல் பிரச்சினைகளுக்கு விடிவு கிடையாது போல.)

"சரி; கனகா ; இப்ப நான் என்ன செய்யணும்?"

"இப்ப அவரு ஆவி வரும்; அவர் சொல்றதையும் கேட்டு வையுங்க."

முறை மாமன் முனியசாமி ஆவி வந்தது. இது ஆண் ஆவி என்பதால், சிறிது சத்தமாக வந்தது. திரைசீலைகள் இங்கும் அங்கும் அல்லாட ஆரம்பித்தன. ஜன்னல் கதவுகள் “படார் படார்” என்று இங்கிட்டும் அங்கிட்டும் அடிக்க ஆரம்பித்தன.

"யப்பா; முனியசாமி ஆவியா?"

"ஆமாங்க சாமி."

(ஆவியானுலும், நமக்கு மரியாதை கொடுக்கிறதை நினைக்கும் போது மனசுக்கு நெகிழ்வா இருந்தது. நம்ம flat wathcman கூட காலைல வணக்கம் சொல்லும்போது மூஞ்சியை உம்முனு வஞ்சிக்கிட்டு தான் சொல்லுவான்).

"சரி, உங்க பிரச்சினையை நம்ம கனகா ரொம்ப தெளிவாக சொல்லிட்டுது; நீ உன் பிரச்சினையை சொல்லு."

மீண்டும் ஒரு கதை வந்தது. (மீண்டும் காலத்தின் தன்மை கருதி அதைblockout செய்ய வேண்டிய கட்டாயத்திற்கு நான் தள்ளப்பட்டேன்.)

மணி சரியா இரவு - 01.15.

சிறிது நேரம் மவுனம் நீடித்தது. கனகம் ஆவியும், முனியசாமி ஆவியும் அந்த அறையில் இருந்ததை என்னால் உணர முடிந்தது.

சில சமயம் "உச் உச்" என்று சத்தம் கேட்ட மாதிரி இருந்தது. "அப்படியும் இருக்குமோ?;

சே சே அப்படியிருக்காது. ஆவிகளுக்கு இப்படி முடியுமான்னு தெரியல்ல" என்று நான் என் மனசை சமாதானப்படுத்திக்கொண்டு, நெஞ்சையும் நீவி விட்டுக்கொண்டேன்.

நானும் ஒன்றும் சொல்லவில்லை; கனகாவும் ஒன்றும் சொல்லவில்லை; முனியசாமியும் ஒன்றும் சொல்லவில்லை. இரண்டு நிமிடங்கள் கழிந்ததது. கனகாவும் முனியசாமியும் கோரஸாக பேசினார்கள்.

"ரொம்ப நன்றிங்க சாமி; எங்க கஷ்டத்தை கேட்கிறதுக்கு உங்களை மாதிரி நாலு ஜீவன்கள் இருக்குன்னு நினைக்கும்போது, ரொம்ப சந்தோசமா இருக்குது. நாங்க கிளம்புறோம். இனி நாங்க தொந்தரவு

செய்யமாட்டோம். நீங்க நல்லா தூங்கி எந்திரிச்சு காலைலே உங்க ஊருக்கு போங்க."

ஆவிகள் விடைபெற்று விட்டு சென்றன. நன்றாக தூங்கினேன். காலையிலே அறையை vacate செய்தபின்னர், பில் ஒரு கவரில் வைத்து தந்தார்கள்.

கவரின் மேல் print செய்யப்பட்டிருந்தது. "நீங்கள் ஒருவரை அறிமுகம் செய்யுங்கள் - 50 பெர்ஸன்ட் தள்ளுபடி பெறுங்கள்." மரியாதையா சென்னை வந்து சேர்ந்தேன். மறு நாள் நம்ம நாலாம் நம்பர் வீட்டு நண்பன் நாராயணசாமி வந்து சேர்ந்தான். "என்னப்பா; ஊட்டி போய்ட்டு வந்ததா

கேள்விப்பட்டேன். நான் வெள்ளிகிழைமை அங்கெ போறதாயிருக்கேன். தங்குறதக்கு நல்ல இடமா இருந்த சொல்லுப்பா."

(40000 ரூபாய் கடன் வாங்கிட்டு நாலு வருஷமா இழுத்து அடிச்சிக்கிட்டு இருக்கான் இந்த படுபாவி - செத்தாண்டா சேகரு.)

எனக்கு இந்த பழமொழியில் எப்போதும் நம்பிக்கையுண்டு- "யாம் பெற்ற இன்பம் இவ்வையகமும் பெற வேண்டும்."

அந்த "50 பெர்சன்ட் தள்ளுபடி" எனது கண் முன்னால் சும்மா சும்மா வாலை ஆட்டிக்கொண்டு சென்றது.

இரத்தின சுருக்கமா விளக்கம் கொடுத்தேன்: "நல்ல லொகேஷன்; தங்குறதுக்கு சுகமான அறை ; நிறைய automatic arrangements உண்டு; நீbath ரூம் கதவை திறந்து, அப்படியேgeyserஐ ஒரு look விட்டீன்னா போதும்; அப்படியே அது on ஆகிடும்; படுக்கையிலே படுத்தவுடன், போர்வையை lift பண்ணுனால் போதும்- அப்படியே உன் மேலே பறந்து வந்து போர்த்திக்கும்; scent பாட்டில் மேல் கை வைச்சா போதும்; அப்படியே அறை முழுவதும் ஸ்மெல் பரவ ஆரம்பிச்சுடும். Fan ஐ ஒரு look விட்டா போதும்- அது ஓட ஆரம்பிச்சுடும். எல்லாம் sensor type முறையிலே பண்ணியிருக்காங்க; அது ஒரு mind reading concept. நம்ம Bill Gates

வீட்டுக்கு சவால் விடுற மாதிரியான ஒரு அமைப்பு."

நாராயணசாமி திறந்த வாய் மூடாமல் கேட்டுக்கொண்டிருந்ததை பார்த்தபோது, எனக்கு 100 பெர்ஸன்ட் நம்பிக்கை வர ஆரம்பித்தது - எப்படியும் நமக்கு அந்த 50 பெர்ஸன்ட் திரும்பி வந்துடும்னு.

---::: :::---